திறக்கப்பட்ட உயர்நிலைப்பள்ளி சிவாவின் ஞாபகார்த்தமாகப் பெயரிடப்பட்டது. அதன் பேரில் வேறு நினைவுச் சின்னம் அமைக்கும் யோசனை மேற்கொள்ளப்படவில்லை.

**Sri T. L. SASIVARNA THEVAR :** ஒட்டப்பிடாரத்தில் வ.வு.சி. திருப்பூர் குமரன் இவர்களுடைய ஞாபகார்த்தமான கட்டிடத்திற்கு அஸ்திவாரக் கல் நாட்டினார்களே, அது எந்த நிலையில் இருக்கிறது ?

**Mr. SPEAKER :** இதற்குத் தனிக் கேள்வி போடவேண்டும்.

**Sri A. VEDARATHNAM :** பாப்பாரப்பட்டியில் அவர் பேரால் நிறுவ இருக்கும் அந்தப் பள்ளிக்கூடத்தில் அவருடைய ஞாபகச் சின்னமாக உருவச் சிலை ஏற்படுத்த அரசாங்கம் முன்வருமா ? அதைப்பற்றி யோசிக்குமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** அரசாங்கம் ஒன்றும் அது மாதிரி செய்வதாக இல்லை. தனிப்பட்டவர்கள் முயற்சி எடுத்துக் கொண்டால் அதற்கு என்ன உதவி அளிப்பது என்பது பற்றி அரசாங்கம் யோசிக்கும்.

Mr. SPEAKER : Questions Nos. 102 and 103 may be taken up together as they relate to the same subject.

*Talavadi firka*

* 102 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Chief Minister be pleased to state whether this Government have received any communication from the Chairman, Zonal Council, regarding the merger of the Talavadi firka of Madras State with the Mysore State?

The Hon. Sri C. SUBRAMANIAM : No, Sir.

*** 103 *Q.*—Sri S. M. ANNAMALAI :** கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தளவாடிப் பிர்க்காவை மைசூர் மாநிலத்துடன் சேர்க்கக் கோரி மகசர் வந்ததா ?

(இ) அப்படியாயின், அதன் மீது சர்க்கார் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) The Government did not consider it necessary to take any action in the matter.

**Sri N. K. PALANISAMI :** அந்தப் பகுதியில் இருக்கக்கூடிய மக்கள் மைசூர் ராஜ்யத்துடன் சேரவேண்டும் என்று வரி கொடா இயக்கம் நடத்துவதாகப் பத்திரிகையில் பார்த்தேன். அப்படி

23rd January 1961]

அவர்களுக்கு மைசூர் ராஜ்யத்துடன் சேரவேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டதற்குக் காரணம் என்ன? நமது சர்க்கார் அங்கே போதுமான அபிவிருத்தி வேலைகளைச் செய்யத் தவறி விட்டார்கள் என்ற காரணத்தினாலா?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** எதனாலே கிளர்ச்சி ஏற்படு கிறது என்றால் சிலர் கிளர்ச்சியை உண்டுபண்ணிவிடுவதையே தொழிலாக வைத்துக்கொள்கிறார்கள். கிளர்ச்சியை உண்டு பண்ணி அதனால் தாங்கள் வருவாய் பெறமுடியும் என்று நினைக் கிறார்கள். வேறு விதமான சில குறைகளும் இருக்கலாம். குறைகள் எல்லா இடத்திலும்தான் இருக்கின்றன. ஆனால் அது மலைப்பகுதியாக இருக்கிற காரணத்தினால் முக்கியமாக உள்ள குறைகளைத் தீர்ப்பதற்கு சர்க்கார் திட்டம் தீட்டி பல வேலைகள் அங்கே இப்போது நடக்கின்றன.

**SRI M. KALYANASUNDARAM:** இந்தப் பகுதியிலே இருக்கக் கூடிய பெரும்பாலான மக்கள் என்ன மொழி பேசுகின்றார்கள்? அவர்களை கிளர்ச்சி செய்யும்படி யாரோ தூண்டிவிடுவதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அந்தக் கிளர்ச்சிக்காரர் களின் வலையில் அவர்கள் சிக்காமல் இருப்பதற்கு சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள்?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** கிளர்ச்சிக்காரர்களின் வலையில் இருந்து மக்களை சர்க்கார் மீட்கவேண்டும் என்பதே இல்லை. கிளர்ச்சிக்காரர்களின் ஏமாற்றத்தை அவர்களே உணர்ந்து கொண்டார்கள் என்றால் தானே விலகி விடுவார்கள். சர்க்காரைப் பொறுத்த வரையில் எல்லாப் பகுதிகளிலும் அபிவிருத்தி திட்டங்களை ஏற்படுத்துவது போல இங்கும் ஏற்படுத்தும். அதற்கு மேலே செய்ய முடியாது. நான் திட்டவட்டமாகச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இனிமேல் நம்முடைய மாநிலத்திலே எந்த எல்லையை மாற்றி அமைக்கவேண்டும் என்ற பிரச்சனையையும் இந்தத் தலைமுறையில் எடுத்துக் கொள்ளக் கூடாது என்பது இந்தச் சர்க்காரின் கருத்து. பின்னாலே என்ன ஏற்படும் என்று சொல்ல முடியாது.

**SRI P. G. MANICKAM:** சில மாதங்களுக்கு முன்பு கனம் நிதி அமைச்சர் அவர்கள் தளவாடி பிர்க்காவிற்கு நேரில் விஜயம் செய்து மக்கள் குறைகளை அறிந்துகொண்டதால் இப்போது நல்ல காரியங்கள் நடைபெறுவதால், இப்போது 100-க்கு 80 பேர்கள் சர்க்கார் மீது நம்பிக்கைக் கொண்டு மைசூர் ராஜ்யத்தோடு சேர வேண்டாமென்று சர்க்காருக்குத் தெரிவித்திருக்கிறார்களே, அதன் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** எந்தக் கிளர்ச்சிக்கும் 100 அல்லது 200 பேர்கள் இருந்தால்போதும். அதை ஒரு பெரிய கிளர்ச்சியாகக் காண்பித்து விடலாம். இந்தக் கிளர்ச்சியை மக்கள் கிளர்ச்சியாக எடுத்துக்கொள்ளக்கூடாது.

[23rd January 1961

MR. SPEAKER : The Hon. Minister for Revenue is not here now and so question No. 104 will be taken up later.

*Teaching grants*

* 105 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Government are aware of the fact that teaching grant bills for the aided schools in North Arcot district are being sent only in the third week of the next month instead of the first week?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

The grants due for a month is payable on or before the 15th of the succeeding month. There was a short delay of seven days in the office of the District Educational Officer, Vellore, in sending the grant due for July 1960 and it was due to the fact that the offices of the department were pre-occupied in connection with the school improvement conference held at Vellore in August 1960. In respect of Tiruvannamalai Education district there was no such delay.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that the teaching grant for December 1960 has not yet been received in Ambur, Vaniyambadi and other towns and municipalities and so, will the Government take action for its quick disbursement?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not think that it is still pending payment. As a matter of fact, I have passed orders just now that the amount should be paid by the first of every month and that is being implemented in all the districts.

SRI K. VINAYAKAM : Is the Hon. Minister aware that recently the Department have issued instructions to the schools concerned that the monthly returns should be submitted by 20th of this month itself and they should be finalised by the 25th instant and the amount paid to the institutions on the 1st of next month itself?

THE HON. SRI C. SUBRAMANIAM : That is what I have just informed the House. Hereafter grants will be paid by the first of every month.

MR. SPEAKER : Now the Hon. Minister for Revenue has come and I shall take up question No. 104.

*Integration of Ambur and Vaniyambadi*

* 104 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have received any proposals from the Collector, North Arcot, for the integration of Ambur with Vaniyambadi to form a separate taluk; and

(*b*) if so, the reason therefor?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Does not arise.